சுபமங்கள ஸ்தோத்ர சிரீஸ் : 5

# குரு பகவான்

(ஆராதனை முறை, அஷ்டோத்தர சத நாம அர்ச்சனை, கவசம், மந்திரம், காயத்ரி புராண வரலாறுகள் அடங்கியது.)



நான்காம் பதிப்பு 1994] [விலை: ரூ. 3.00

கடலங்குடி பப்ளிகேஷன்ஸ்
38, நடேச அய்யர் தெரு,
தி. நகர், (பஸ் நிலையம் அருகில்)
சென்னை-600 017.

உ

ஸ்ரீராமஜெயம்



# குரு பகவான்

**வா**ரத்தின் நாட்களைப் போல், அதே வரிசையில், சூரியன் (ஞாயிறு), சந்திரன் (திங்கள்) என்ற முறையில் வியாழன் ஐந்தாவது நாளாகும். வியாழன் என்றால் குரு பகவான். பிருஹஸ்பதி என்றும் அவரை அழைப்பார்கள். இவர் தேவர்களுக்கெல்லாம் தலைவர்; ஆசானைப் போன்

றவர்; சிறந்த அறிவாளி; நன்மையே செய்யும் இயற்கைக் குணம் அமைந்தவர்.

''நீ என்ன பிருஹஸ்பதியா?'' என்று நம்முள் ஒருவரை ஒருவர் கேட்டுக் கொள்வதைப் பார்த்திருக்கலாம். 'பிரு ஹஸ்பஸ்பதி' என்றால் 'அறிவில் சிறந்தவன்' என்ற பொரு ளில் அப்படிக் கேட்கிறார்கள்.

பிரம்ம தேவனுடைய மானஸ் புத்திரர்களில் ஒருவரா கிய அங்கிராமுனிவருக்கும் ச்ரத்தாதேவிக்கும் புதல்வராகப் பிறந்தவர் வியாழ பகவான். அவருடைய மனைவி தாரை. சகோதரனின் பெயர் உதத்தியன், சகோதரியின் பெயர் யோகசித்தி; அவருடைய புதல்வர்தாம் மகரிஷி பாரத் துவாஜர்.

குருவையும் அவர் மகனையும்பற்றி அற்புதமான கதை ஒன்று உண்டு. அந்தக் கதை சினிமாவாகவும் வெளிவந்தி ருக்கிறது. குருவின் புதல்வன் கசன். இறந்தவரை உயிர்ப் பிக்கும் சஞ்சீவினி மந்திரத்தை, அசுரர்களின் குருவான சுக் கிரபகவானிடமிருந்து அறிந்து கொள்வதற்காக, அவரிடம் மாணவனாகச் செல்கிறான்.

தேவகுருவின் புதல்வன் என்று சொல்லாமல் அவரிடம் சிஷ்யனாகிறான். அசுரகுருவான சுக்கிர பகவானுக்குத் தேவயானை என்ற அழகிய மகள் இருக்கிறாள். கசனின் அறிவாற்றலிலும் இளமையிலும் அழகிலும் மயங்கி அவ னைக் காதலிக்கிறாள், தேவயானை. காதலியின் உதவி யால் கசன் சுக்கிரபகவானிடம் சஞ்சீவினி மந்திரத்தைக் கற்றுக் கொண்டு விடுகிறான். கடைசியில் உண்மையை. அறிந்தசுக்கிர பகவான் கசனைச் சபித்து விடுகிறார் இந்தக்கதை மகாபாரதத்தில் ஆதிபர்வத்தில் வருகிறது.

முனிபுங்கவர் அங்கிராவின் குமாரனாகையால் ஆங்கிர ஸர் என்ற பெயரும் குரு பகவானுக்கு உண்டு. குருபகவான்

காசிக்குச் சென்று அங்கே ஒரு சிவலிங்கத்தை நிறுவிப் பூசித்துப் பதினாயிரம் ஆண்டுகள் தவம் செய்தார். அவர் தவத்தை மெச்சியச் சிவபெருமான் அவருக்குச் காட்சியளித்து ''இந்தச் சிவலிங்கத்தை ஸ்தாபித்துப் பூசித்துத் தவம் செய்ததால் உனக்குக் கிரக பதவி அளிக்கிறேன். உனக்கு நல்ல குணங்களே அமையப் பெற்றிருக்கும் வரத்தையும் அளிக்கிறேன். என்னுடைய திருவருளால் நீ இந்திரனுக்குக் குருவாக விளங்குவாயாக என்று வரம் கொடுத்தார்.'' இந்தக் கதை காசிக்காண்டத்தில் உள்ளது. குரு பூசித்ததாகச் சொல்லப்படும் சிவ்லிங்கமும் காசியில் இன்றும் உள்ளது.

தமிழகத்தில் வியாழ பகவான் பூசித்துப் பேறு பெற்ற தான மூன்று தலங்கள் உள்ளன. தென்குடித்திட்டை, திருவலிதாயம், திருச்செந்தூர் என்பவை அவை.

தென்குடித்திட்டை என்ற தலம் மாயவரம் தஞ்சாவூர் ரெயில் பாதையில் உள்ளது. திட்டை என்பது ரெயில்வே நிலையத்தின் பெயர். இது தேவாரப் பதிகம் பெற்றதலம். திருஞான சம்பந்தர் இந்தத் தலத்து மூர்த்தியான பசுபதி நாதரையும் உலக நாயகியையும் பாடியிருக்கிறார். காமதேனு, ஆதிசேஷன், குருபகவான் ஆகியோர் இந்தத்தலத்து மூர்த்தியை பூசித்துப் பேறு பெற்றிருக்கின்றனர்.

அடுத்த தலம் திருவலிதாயம் என்பது. இந்த நாளில் இந்தத் தலம் 'பாடி' என்று வழங்குகிறது. சென்னைக்கு அருகே உள்ளது. இதுவும் தேவாரப் பாடல் பெற்ற தலம். இந்தத் தலத்து மூர்த்தியான வலிதாய நாதரையும் அம்பிகை தாயம்மையையும் திருஞான சம்பந்தப் பெருமான் பாடியிருக்கிறார். இந்தத் தலத்து நாதரைக் குருபகவான் பூசித்ததாக அந்தத் தல வரலாறும் குறிப்பிடுகிறது.

''உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர் அலைவாய்'' என்று புகழ்பெற்ற திருச்செந்தூர் மூன்றாவது திருத்தலமாகும். முருகனின் ஆறுபடை வீடுகளில் முக்கியமான

ஒன்று இது. கீழ்க் கடற்கரை ஓரத்தில் அமைந்திருக்கும் அழகிய திருத்தலம். கடலலைகள் கோட்டைச் சுவரின் மேல் மோதுகின்றன. 'ஹோ' என்ற இரைச்சலுடன் முருகனின் திருவடியை அபிஷேகம் செய்ய வருவனபோல், கடலலைகள் எழும்பி வரும் காட்சியையும், மதில் சுவர்களில் பட்டுத் திரும்பும் வேகமும் கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். திருச்செந்தில் முருகன் கடலைப் பார்த்துக் கொண்டு கிழக்கு முகமாக சந்நிதி உடையவன்.

கச்சியப்ப சிவாசாரியர், தம் கந்தபுராணத்தில் ''பரு மணி வயிரம் முத்தம் பலவளம் பிறவும் ஆழித் திரையெறி அலைவாய் ஆகும் செந்திமாநகரம்'' என்று பலவித நவரத்தினங்களும், வைரமும் முத்தும் பல வளமும் கொழிக்கும் கடற்கரை என்று பாடியிருக்கிறார்.

இந்தத் தலத்திலிருந்துதான் முருகப் பெருமான் சூரபதுமனின் ஊராகிய வீரமகேந்திரபுரிக்குச் சென்று, அவனுடன் போரிட்டார். அவனைச் சம்ஹாரம் செய்து ஆட்கொண்டு, அவனையே சேவலும் மயிலுமாக, கொடியாகவும் வாகனமாகவும் ஏற்றுக் கொண்டார். சூரன் இறந்ததும் அவன் சிறைப்படுத்தியிருந்த தேவர்களை எல்லாம் விடுவித்து, அவர்களது துன்பங்களை எல்லாம், போக்கினான் குமரன்.

சூரபதுமனை வெற்றிகொண்ட மூர்த்தியாகவே குன்றுதோறாடும் குமரன் இங்கே எழுந்தருளி அருள்புரிகிறான் என்பர் அருணகிரிநாதர்.

சிவபெருமானின் ஆசியுடன் சூரபதுமனை வெற்றி கொள்ளப் புறப்பட்ட முருகன், லட்சத்து ஒன்பது வீரர்களுடன் தெற்கு நோக்கி வந்தார். வழியில் தடைசெய்த தாரகாசூரனையும் கிரௌஞ்சு மலையையும் அழித்துவிட்டு வந்த முருகன் திருச்செந்தூரில் தங்கினார். குமரன் தங்கு

வதற்கேற்ற முறையில் தேவதச்சனாகிய விசுவகர்மா ஓர் அழகிய ஆலயத்தை நிர்மாணித்துத் தந்தான்.

அந்தக் கோயிலில் தங்கிய முருகப்பெருமான் குரு பகவானை அழைத்து அசுரர்களின் தன்மைகளையும் அவர்கள் செய்யும் துன்பங்களையும் விளக்கிச் சொல்லும்படி கேட்டார். குருபகவானும் அவ்வாறே கூறினார்.

அவர் கூறியதைக் கேட்ட முருகப்பெருமான் நேராகச் சென்று சூரபதுமனைச் சம்ஹாரம் செய்து ஜயம் கொண்டவனாகத் திரும்பினார். இந்தத் தலத்து முருகனைக் குரு பகவான் முறைப்படி பூஜித்துப் பேறு பெற்றார் என்று **செந்தில் புராணம்** கூறுகிறது.

ஆதிசங்கர பகவத் பாதர்கள் **ஸ்ரீசுப்ரம்ஹண்ய புஜங்கம்** என்ற தோத்திர நூலை இயற்றியதும் இந்தத் தலத்தில் தான். இந்தப் புஜங்கத்தைப் பக்தியுடன் பாராயணம் செய்தால் நோய் நொடிகள் குணமாகும் என்றும் சொல்லுவார்கள். இது **எமது கருணை காட்டும் கந்தன்** என்ற சுபமங்களத் தோத்திர நூலில் உள்ளது. **திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்** என்ற நூலும் **திருச்செந்தூர்த் தலபுராணமும்** செந்தில் முருகனின் பெருமையைச் சொல்லுகின்றன.

குரு பகவானைப்பற்றிக் **காசிகாண்டம்** விவரமாகச் சொல்லுகிறது. அவர் பொன் வண்ண மேனியர்; நான்கு திருக்கரங்களை உடையவர்; கமண்டலம், அட்சமாலை, யோக தண்டம் என்பவற்றையும் நான்காவது கரத்தில் அபயமுத்திரையையும் காணலாம். ஆனால் சில நூல்களில் வியாழ பகவான் இரண்டே திருக்கரங்கள் உடையவர் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. புத்தகத்தையும் அட்சமாலையையும் மட்டும் அவற்றில் ஏந்தியிருப்பார் என்றும் தெரிகிறது.

குருபகவானை வணங்கினால் சாந்த குணமும் அறிவுத் தீட்சண்யமும் உண்டாகும். பொன் மலர், பொன்னாடை, பொன்குடை, பொன்னிறத்துவஜம் போன்று எல்லாம் பொன்னால் செய்த பொருள்களையே வைத்திருப்பதாக **விஷ்ணுதர்மோத்தரம்** என்ற நூலில் சொல்லியிருக்கிறது.

பிருஹஸ்பதி ராசிக் கட்டத்தில் மீன ராசிக்கும் தனுர் ராசிக்கும் சொந்தக்காரர். 'இவை இரண்டும் ஆட்சி வீடுகள். மகரத்தில் குரு நீசன்; கடகத்தில் உச்சன். இவருக்கு அன்ன வாகனம் உண்டு என்று ஒரு நூல் சொல்கிறது; யானை வாகனம் என்றும் சொல்கிறார்கள்.

இவருக்கு உகந்த தானியம் கடலை; புஷ்பராகம் இவருக்குப் பிடித்த மணி; மலர் முல்லை; சமித்து அரசு; இனிப்புச் சுவை இவருக்குப் பிடித்தது. குருவை வழிபட்டால் சிறந்த கீர்த்தியையும் வாக்குவன்மையையும் அருளுவார். ஈசான்ய திசை அவருக்கு உரியது. வியாழ பகவானின் அதிதேவதை இந்திர மருத்துவன்; ப்ரத்யதி தேவதை பிரம்மா. வாகீசர் பீதாம்பரர் யுவர் என்று குரு பகவானுக்குப் பல திருநாமங்கள் உள்ளன. கருணை உணர்வு நிரம்பியவராதலின் 'தயாகரர்' என்ற நாமமும் வழங்குகிறது.

அக்னியைப் போல, குருபகவானும் பரிசுத்தமானவர் என்றும், சிவந்த மேனியுடன் அழகிய உருவம் படைத்தவர் என்றும் எடுப்பான குரல் உடையவர் என்றும், ஏழு வாய்களும் அழகிய மெல்லிய நாக்கும் கூரிய கொம்புகளும், நூறு இறக்கைகளும் பெற்றவர் என்றும்; கையில் இரும்புக் கோடரி தரித்திருப்பார் என்றும் **ரிக்வேதத்தில்** வருகிறது. விச்வரூபா என்ற பசுவின் மேல் ஆரோகணித்து வருபவர் குருபகவான் என்றும் சொல்லியிருக்கிறது. பொன், குருவுக்குப் பிரீதியான உலோகம் ஆகும்.

அக்கிரமங்களை அழித்து நன்மையைப் பெருக்கியவர்

என்றும் ரிக்வேதத்தில் பல இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. அதே போல் ஜோதிட நூல்களும் குருபகவான் நன்மையைப் பெருக்கித் துன்பங்களைத் துடைப்பவர் என்று சொல்லுகின்றன. ஒரு நாட்டில் அமைதியும் வளமும் உண்டாகக்கூட, குருபகவானின் நல்லருள் வேண்டும்.

இராமாயணத்திலும் மகாபாரதத்திலும் குரு பகவானைப் பற்றியக் குறிப்புகள் உள்ளன. குருவின் மகன் கசன் அசுர குருவிடம் சென்று சஞ்சீவினி மந்திரத்தைக் கற்கும் செய்தி மகாபாரதத்தில்தான் வருகிறது. மகாராஜா பரீக்ஷித்தின் மகன் ஜனமேஜயன், தன் தகப்பன் பெற்ற சாபத்தால், பாம்புகளைக் கண்டால் கொன்று போடத் தலைப்பட்டான். "அப்படிச் செய்வது தவறு. ஓர் இனத்தை அழிப்பது மகாபாபம்" என்று ஜனமேஜயனைத் தடுத்தவர் குருபகவான் தான்.

இந்திர லோகத்தில் ஒருநாள் வியாழன் ஸ்நானம் செய்ய ஏரிக்கரைக்குச் சென்றார். அந்த ஏரியின் தண்ணீர் ஒரேயடியாகக் கலங்கியிருப்பதைக் பார்த்துக் கோபம் கொண்டு "உன் அழுக்குத் தண்ணீரில் மீன்களும் தவளைகளும் வாசம் செய்யட்டும்" என்று உடனே சபித்து விட்டார். அது முதல் கலங்கிய தண்ணீராக இருந்தாலும் மீன்களும் தவளைகளும் அதில் வாழத் தலைப்பட்டன.

முத்துச்சாமி தீட்சிதர் தம் நவக்கிரகக் கீர்த்தனைகளில் வியாழப் பகவானைப் பற்றியும் கீர்த்தனம் இயற்றியிருக்கிறார். அடாணா ராகத்திலுள்ள "பிருஹஸ்பதே, தாராபதே ப்ரஹ்மஜாதே நமோஸ்துதே" என்ற கீர்த்தனம் குருபகவானின் இயல்புகளையும் பெருமைகளையும் சொல்கிறது. பிராம்மண குலத்தில் உதித்தவர் குரு என்கிறார் தீட்சிதர். ஸர்வ வியாபகர். சூரியனுக்கு அதிபதி. இவரின் திருக்கரத்தில் வச்சிராயுதம் இருப்பதாகச் சொல்லுகிறார். ஏழைக்கு இரங்குபவர்; நீதி சாஸ்திரங்கள் அறிந்தவர்; அவற்றை இயற்றியவர்; களங்கம் இல்லாதவர்.

குரு பகவானின் படத்தைப் பார்த்தால் மனைவி தாரையின் உரு மிகச் சிறியதாக வரையப்பட்டிருக்கும். அறிவும் தெளிவும் ஞானமும் பெற்ற குருவின் முன் காமம் சிறுமையடைவதைக் காட்டுவது போல் அப்படி வரையப் பட்டிருக்கிறது.

நான்கு சக்கரங்கள் கொண்ட ரதத்தில் நாற்கோணப் பீடத்தில் எழுந்தருளியிருப்பவர் இவர். அந்த ரதத்தின் ஓரத்தில் வில்லும் மீனும் அடையாளங்களாக இருக்கும். அவை தனுர் ராசிக்கும் மீன ராசிக்கும் அவர் அதிபதி என்பதைக் குறிக்கின்றன.

குரு பகவானைப் பற்றிய குறிப்புகளிலிருந்து அவர் வாக்குக்கும் அறிவுக்கும் அதிதேவதைக் கிரகம் என்பது தெரிகிறது. அறிவும் வாக்குச் சாதுர்யமும் இருந்தால் ஒரு மனிதன் வாழ்க்கையில் முன்னேறி விடலாம் என்பதில் சந்தேகம் இல்லை. ''தீமைகளை அகற்றி நன்மைகளைச் செய்வதால், குரு நல்லக் கிரகம்'' என்று ஜோதிட நூல்கள் கூறுகின்றன. குரு கடகத்தில் உச்ச வீட்டில் இருக்கப் பிறந்த ஜாதகன், எந்த நாளிலும் உணவுக்கும் உடைக்கும் உறையுளுக்கும் கஷ்டப்படமாட்டான் என்பது நிச்சயம். ஆனால் அதே குரு மகரத்திலோ ஏழாமிடமாகி ரிஷபத்திலோ இருந்தால் மாரக குருவாகி, இன்னலை விளைவிக்கிறான். அத்துடன் காலாகாலத்தில் பெண்களுக்குத் திருமணம் ஆகவும் குரு-பலம் வேண்டும். குரு சிம்ம ராசியில் வரும் போது தான் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை குடந்தையில் மகாமகாப் பெருவிழா நடக்கிறது.

இதுவரையில் குரு பகவானைப் பற்றிய சரித்திர, புராண கதைகளைப் பார்த்தோம். கிரகம் என்ற முறையில் குருவின் தன்மையை வானவியல் ரீதியாக அறியலாம். சுக்கிரனுக்கு அடுத்தபடி ஒளி வீசும் கிரகம் இது. இந்தக் கிரகம் வெறுங் கண்ணுக்கே தெரியுமாகையால் மக்களுக்குப்

பழக்கப்பட்டது. அதன் கனபரிமாணம் மற்றக் கிரகங்களின் கனபரிமாணத்தின் கூட்டுத் தொகையைவிட அதிகமானது. தன் அச்சில் வேகமாகச் சுழல்கிறது. ஒரு தடவை தனக்குத்தானே சுழலப் பத்துமணி நேரத்துக்கும் குறைவாகவே ஆகிறது. (பூமி தன்னைத் தானே சுற்றிக் கொள்வதால்தான் இரவு பகல் இரண்டாகிறது. சுமார் 24 மணி நேரம் ஆகிறது என்பது நமக்குத் தெரியும்.)

சூரியனிலிருந்து 48,30,00,000 மைல் தொலைவில் இந்தக் கிரகம் இருக்கிறது. அதாவது பூமிக்கும் சூரியனுக்கும் உள்ள தொலைவைப் போல் 5.2 மடங்கு, தன் பாதையில் சூரியனை ஒருமுறைசுற்றிவர 11.86ஆண்டுகள் (4,333 நாட்கள்) ஆகின்றன. குருக் கிரகத்தின் கன பரிமாணம் பூமியைப் போல் 1300 மடங்கு. ஆனால் இதன் எடை 320 மடங்குதான். ஒப்படர்த்தி மிகவும் குறைவு; தண்ணீரை விட 1.33 மடங்குக் கனம் உள்ளது.

இந்தக் கிரகத்தின் மத்திய ரேகைக்கு இணையாகப் பட்டை பட்டையாய்ப் பல கோடுகளைப் பார்க்கலாம். அவற்றுள் பல நிலையற்றவை, சில நிலையானவை. இவற்றுள் முக்கியமானது பெரிய செம்புள்ளி. இந்தப் புள்ளிகள் ஏதோ ஒரு திரவப் பொருளில் மிதப்பதுபோல் தோன்றுகிறதே ஒழிய, எந்தத் திடப் பொருளிலும் ஒட்டிக் கொண்டிருப்பதாக தோன்றவில்லை.

குரு கிரகத்துக்குப் பன்னிரண்டுச் சந்திரன்கள் அல்லது உபக்கிரஹங்கள் உள்ளன. இந்த உபக் கிரகங்களில் ஓர் அதிசயம்; 8, 9ஆம் சந்திரன்கள் மட்டும் வக்கிரகதியில் நகருகின்றன. வியாழன் சூரியனைச் சுற்றிவரும் பாதையும் ஏறக்குறைய சமதளத்தில் இருப்பதனால், குருக் கிரஹத்தில் அடிக்கடிக் கிரணங்கள் உண்டாகின்றன.

ஒருவரின் ஜாதகத்தில் குரு நல்ல முறையில் அமைந்தி

ராவிட்டால், குரு பகவானை துதித்து வணங்கினால் நிச்சயம் அவர் அருள் புரிவார். இயற்கையில் நல்ல குணங்கள் வாய்க்கப் பெற்றவர் அல்லவா அவர்!

ஒவ்வொருக் கிரகத்தையும் துதித்து வணங்க ஒருமுறையையும் துதிகளையும் நம்முன்னோர் உருவாக்கித் தந்திருக்கின்றனர். நவக்கிரக ஆராதனை முறை என்ற நமது நூலில் இந்த வழிமுறைகளைக் காணலாம்; பயன் பெறலாம்.

இதில் குரு பகவானைப் பற்றிய சரித்திர புராண வரலாறுகளும் விஞ்ஞான உண்மைகளும், காயத்திரியும், துதியும், அர்ச்சனையும், கவசமும் உள்ளன. தமிழ் எழுத்திலேயே தெளிவாக வெளியிட்டிருக்கிறோம்:

## குரு பகவான் காயத்திரி

வ்ருஷப த்வஜாய வித்மஹே
க்ருணி ஹஸ்தாய தீமஹி |
தந்நோ குரு: ப்ரசோதயாத் ||

ஒவ்வொரு நாளைக்கும் உண்டான நவக்கிரகக் கோலங்களும் உள்ளன. குருவின் நாளாகிய வியாழக் கிழமைகளில் கீழ்க்காணும் சுலோகங்களைப் படித்தால் சிறந்த பயன் உண்டாகும்:

## குருபகவான் ஸ்துதி

தேவாநாஞ்ச ரிஷீணாஞ்ச குரும் காஞ்சந ஸந்நிபம் |
பக்தி பூதம் த்ரிலோகேஸம் தம்நமாமி ப்ருஹஸ்பதிம் ||

எல்லா நவக்கிரகங்களும் இணைந்த படத்தையோ தனியாகக் குரு பகவான் உள்ள படத்தையோ வாங்கி

வைத்துப் பூசிக்கலாம். நவக்கிரகப் பூஜைக்குப் பக்திதான் முக்கியம். ஸௌகரியப்படி செய்யலாம்; கவசம் ஸ்தோத்திரம் அஷ்டோத்தர-சத-நாம அர்ச்சனை எல்லாவற்றையும் இயன்ற நாட்களில் செய்யலாம்.

## ஸ்ரீப்ருஹஸ்பதி கவசம்

ஓம் அஸ்ய ஸ்ரீ ப்ருஹஸ்பதி கவச மஹா மந்த்ரஸ்ய | ஈச்வர ரிஷி: | அனுஷ்டுப் ச்சந்த: | ப்ருஹஸ்பதிர் தேவதா அம்பீஜம் | ஸ்ரீம்சக்தி: | க்லீம் கீலகம் | மம ப்ருஹஸ்பதி க்ரஹ ப்ரஸாத ஸித்த்யர்த்தே ஜபே விநியோக: | **(கரன்யாஸ:)** காம் அங்குஷ்டாப்யாம் நம: | கீம் தர்ஜனீப்யாம் நம: | கூம் மத்யமாப்யாம் நம: | கைம் அனாமிகாப்யாம் நம: | கௌம் கனிஷ்டிகாப்யாம் நம: | க: கரதல கரப்ருஷ்டாப்யாம் நம: | **(அங்கன்யாஸ:)** காம் ஹ்ருதாய நம: கீம் ஶிரஸே ஸ்வாஹா | கூம் ஶிகாயை வஷட் | கைம் கவசாய ஹும் | கௌம் நேத்ரத்ரயாய வௌஷட் | க: அஸ்த்ராய பட் | பூர்ப்புவஸ்ஸுவரோம் இதி திக் பந்த: |

**(த்யானம்)**

*தப்த காஞ்சன வர்ணாபம் சதுர்ப்புஜ ஸமன்விதம் |*
*தண்டாக்ஷ ஸூத்ர ஹஸ்தம் ச கமண்டலு வரான்விதம்*
*பீதாம்பரதரம் தேவம் பீதகந்தானு லேபனம் |*
*புஷ்பராகமயாபூஷம் விசித்ர மகுடோஜ்ஜ்வலம் ||*
*ஸ்வர்ணாஸ்வரதமாரூடம் பீதத்வஜ ஸுஶோபிதம் |*
*மேரோ: ப்ரதக்ஷிணம் ஸம்யகாசரந்தம் ஸுஶோபனம்*
*அபீஷ்டவரதம் தேவம் ஸர்வக்ஞம் ஸுரபூஜிதம் |*
*ஸர்வகாமார்த்த ஸித்த்யர்த்தம் ப்ரணமாமி குரும் ஸதா ||*

இங்கு **ஸமித்யாமி பூஜை** செய்ய வேண்டும்.

*ப்ருஹஸ்பதிஸ் ஶிரோ பாது லலாடம் பாது மே குரு: |*
*கர்ணௌ ஸுரகுரு: பாது நேத்ரே மே அபீஷ்டதாயக: ||*
*நாஸாம் பாது ஸுராசார்ய: ஜிஹ்வாம் மே வேதபாரக: |*
*முகம் மே பாது ஸர்வக்ஞ: புஜௌ பாது ஶுபப்ரத: ||*

கரௌ மே வரத: பாது வக்ஷோ மே பாது கீஷ்பதி: |
ஸ்தனௌ மே பாது வாகீஶ: குக்ஷிம் மே சுபலக்ஷண:
நாபிம் பாது ஸுநீதிக்ஞ: கடிம் மே பாது ஸர்வத: |
ஊரூ மே பாது புண்யாத்மா ஜங்கே மே க்ஞானத: ப்ரபு: |
பாதௌ மே பாது விச்வாத்மா ஸர்வாங்கம் ஸர்வதாகுரு: |

(மீண்டும் அங்கன்யாசம் செய்ய வேண்டும்)

ய இதம் கவசம் திவ்யம் த்ரிஸந்த்யம் ப்ரபடேந்நர: |
ஸர்வான் காமான் அவாப்னோதி ஸர்வத்ர விஜயீ பவேத்
ஸர்வத்ர பூஜ்யோ பவதி வாக்பதே:ச ப்ரஸாதத: |

## ஶ்ரீப்ருஹஸ்பதி ஸ்தோத்ரம்

ஶ்ரீ பகவானுவாச

ப்ருஹஸ்பதிஸ் ஸுராசார்ய: தயாவான் சுபலக்ஷண: |
லோகத்ரய குரு: ஶ்ரீமான் ஸர்வக்ஞஸ் ஸர்வகோவித: ||

ஸர்வேசஸ் ஸர்வதா அபீஷ்டஸ் ஸர்வஜித்ஸர்வபூஜித: |
அக்ரோதனோ முனிச்ரேஷ்ட: நீதிகர்தா குரு: பிதா ||

விஶ்வாத்மா விஶ்வகர்தா ச விஶ்வதயா நிரயோநிஜ:
பூர்ப்புவஸ்ஸுவ: ப்ரபு: சைவ பர்தாசைவ மஹாபல: ||

சதுர்விம்சதி நாமானி புண்யானி நியதாத்மனா |
நந்த கோப க்ருஹாஸீன விஷ்ணுனா கீர்திதானி வை

ய: படேத் ப்ராதருத்தாய ப்ரயதஸ் ஸுஸமாஹித: |
விபரீதோ அபி பகவான் ப்ரீதஸ்யாத்து ப்ருஹஸ்பதி: |

ய: ஶ்ருணோதி குருஸ்தோத்ரம் சிரம் ஜீவேத் ந ஸம்ஶய: |
ஸஹஸ்ர கோதான பலம் விஷ்ணோர் வசனதோ பவேத் |
ப்ருஹஸ்பதி க்ருதாபீடா ந கதாசித் பவிஷ்யதி ||

# ஸ்ரீ குருஅஷ்டோத்தரசதநாமஸ்தோத்ரம்

அன்றாடம் நாமாக்களைக் கூறி மலர்களினால் அர்ச்சனை செய்ய முடியாதவர்கள் இந்த ஸ்தோத்திரத்தை மட்டும் பாராயணம் செய்யலாம். நாமாக்களின் சாரமாகத்தான் இது அமைந்திருக்கிறது. அவசரயுகத்தை முன் கூட்டியே எண்ணி இப்படியெல்லாம் நம்முன்னோர்கள் வழிமுறை வகுத்திருக்கின்றனர்.

குருர் குணகரோ கோப்தா கோசரோ கோபதிப்ரிய: |
குணீ குணவதாம் ச்ரேஷ்ட்ட: குரூணாம் குருரவ்யய: ||
ஜேதா ஜயந்தோ ஜயத: ஜீவனாந்தோ ஜயாவஹ: |
ஆங்கீரஸோ அத்வராஸக்த: விவிக்தோ அத்வரக்ருத்பர:
வாசஸ்பதிர் வசினோ வஶ்ய: வரிஷ்ட்டோ வாக்விசக்ஷண: ||
சித்த சுத்திகரஸ் ஸ்ரீமான் சைத்ரஸ் சித்ரசிகண்ட்டிஜ: ||
ப்ருஹத்ரதோ ப்ருஹத்பானு: ப்ருஹஸ்பதி-ரபீஷ்டத: |
ஸுராசார்ய: ஸுராராத்ய: ஸுரகார்ய ஹிதங்கர: ||
கீர்வாணபோஷகோ தன்ய: கீஷ்பதிர் கிரீஶோ ஸ: |
தீவரோ திஷணோ திவ்யபூஷணோ தேவபூஜித: ||
தனுர்த்தரோ தைத்யஹந்தா தயாஸாரோ தயாகர: |
தாரித்ரியநாசகோ தன்ய: தக்ஷிணாயன.ஸம்பவ: ||
தனுர்மீனாதிபோ தேவ: தனுர்ப்பாணதரோ ஹரி: |
ஆங்கிரஸாப்தஸஞ்ஜாத: ஆங்கீரஸகுலோத்பவ: ||
ஸிந்து தேசாதிபோ தீமான் ஸ்வர்ணகாயஶ்ச சதுர்ப்புஜ:
ஹேமாங்கதோ ஹேமவபு: ஹேம பூஷண பூஷித: ||
புஷ்யநாத: புஷ்யராகமணிமண்டன மண்டித: |
காசபுஷ்பஸமானாப: கலிதோஷ நிவாரக: ||
இந்த்ராதிதேவ தேவேஶ: தேவதாபீஷ்டதாயக: |
அஸமான பலஸ்ஸத்வ குண ஸம்பத்விபாவஸு: |
பூஸுராபீஷ்டதோ பூரியஶ: புண்யவிவர்த்தன: |
தர்மரூபோ தனாத்யக்ஷ: தனதோ தர்மபாலன: ||
ஸர்வவேதார்த்த-தத்வக்ஞ: ஸர்வவாபத்-விநிவாரக: |
ஸர்வபாபப்ரஶமனஸ் ஸ்வமதானுகதாமர: ||

ருக்வேதபாரகோ ருக்ஷுராசி மார்க ப்ரசாரக: |
ஸதாநந்தஸ் ஸத்யஸந்த: ஸத்யஸங்கல்பமானஸ: ||
ஸர்வாகமக்ஞ: ஸர்வக்ஞ: ஸர்வ வேதாந்த வித்வர: |
ப்ர்ஹ்மபுத்ரோ ப்ராம்மணேஶ: ப்ரம்மவித்யா விஶாரத: ||
ஸாமனாதிக நிர்முக்த. ஸர்வலோக வஶம்கர: |
ஸஸுராஸுர கந்தர்வ வந்திதஸ் ஸத்வபாஷண: ||
ப்ருஹஸ்பதிஸ் ஸுராசார்ய: தயாவான் ஶுபலக்ஷண: |
லோகத்ரய குரு: ஶ்ரீமான் ஸர்வகஸ் ஸர்வதோ விபு: ||
ஸர்வேஶஸ் ஸர்வதா துஷ்ட: ஸர்வதஸ் ஸர்வபூஜித: ||

## குரு மந்திரம்

ஓம் அஸ்யஶ்ரீ குரு மஹாமந்த்ரஸ்ய | க்ருத்ஸமத ரிஷி:| ஜகதீச் ச்சந்த:, குருர் தேவதா, குருப்ரஸாத ஸித்த்யர்த்தே ஜபே விநியோக: |

**கரந்யாஸ:**

குரவே அங்குஷ்ட்டாப்யாம் நம: |
வாக்பதயே தர்ஜனீப்யாம் நம: |
கீர்வாண வந்திதாய மத்யமாப்யாம் நம: |
வரதாய அனாமிகாப்யாம் நம: |
ஸுராசார்யாய கனிஷ்ட்டிகாப்யாம் நம: |

**அங்கந்யாஸ:**

குரவே ஹ்ருதயாய நம: |
வாக்பதயே ஶிரஸே ஸ்வாஹா |
கீர்வாண வந்திதாய ஶிகாயை வஷட் |
வரதாய கவசாய ஹும் |
ஸுராசார்யாய நேத்ரத்ராய வௌஷட் |
கமண்டலுதராய அஸ்த்ராய பட் |
பூர்ப்புவஸ்ஸுவரோம் இதி திக்பந்த: |

**த்யானம்**

வராக்ஷ மாலிகா தண்ட கமண்டலுதரம் விபும்
புஷ்பராகாங்கிதம் பீதம் வரதம் பாவயேத் குரும் |

**லமித்யாதினா மானஸ பூஜையை** இப்போது செய்ய வேண்டும்.

**மூலமந்த்ரம்**

ப்ருஹஸ்பதே அதியதர்யோ அர்ஹாத்யுமத்விபாதி
க்ரது மஜ்ஜனேஷு |
யத்தீயச் சவஸர்தப்ரஜாத ததஸ்மாஸு
த்ரவிணம் தேஹி சித்ரம்

## ஸ்ரீ குரு அஷ்டோத்தர சத நாமாவளி

ஓம் குரவே நம:
குணவராய
கோப்த்ரே
கோசராய
கோபதிப்ரியாய
குணினே
குணவதாம் ச்ரேஷ்ட்டாய
குருணாம் குரவே
அவ்யயாய
ஜேத்ரே 10
ஜயந்தாய
ஜயதாய
ஜீவாய
அனந்தாய
ஜயாவஹாய
ஆங்கீரஸாய
அத்வராஸக்தாய
விவிக்தாய
அத்வர க்ருத் பராய
வாசஸ்பதயே
வசினே
வச்யாய
வரிஷ்ட்டாய நம:
வாக் விசக்ஷணாய

ஓம் சித்தசுத்தகராய நம:
ஸ்ரீமதே
சைத்ராய
சித்ரசிகண்டிஜாய
ப்ருஹத்ரதாய
ப்ருஹத்பானவே 30
ப்ருஹஸ்பதயே
அபீஷ்டதாய நம:
ஸுராசார்யாய
ஸுராராத்யாய
ஸுரகார்ய ஹிதங்கராய
கீர்வாண போஷகாய
தன்யாய
கீஷ்பதயே
கிரீஶாய
அனகாய 40
தீவராய
திஷண்ய
திவ்ய பூஷணாய
தேவ பூஜிதாய
தனுர்த்தராய
தைத்ய ஹந்த்ரே
தயாஸாராய
தயாகராய

ஓம் தாரித்ரிய நாஶகாய நம:
தன்யாய
தக்ஷிணாயன ஸம்பவாய
தனுர்-மீனாதிபாய
தேவாய
தனுர்பாண-தராய
ஹரயே
ஆங்கீரஸாப்த
ஸஞ்ஜாதாய
அங்கிர: குலோத்பவாய
ஸிந்துதேசாதிபாய
தீமதே
ஸ்வர்ணகாய 60
சதுர்ப்புஜாய
ஹேமாங்கதாய
ஹேம வபுஷே
ஹேமபூஷண பூஜிதாய
புஷ்ய-நாதாய
புஷ்யராகமணி மண்டன
மண்டிதாய
காசபுஷ்பஸமானாபாய
கலிதோஷ நிவாரகாய
இந்த்ராதி தேவ
தேவேஶாய
தேவதாபீஷ்ட
தாயகாய 70
அஸமான பலாய
ஸத்வகுணஸம்பத்
விபாவஸ்வே
பூஸுராபீஷ்டதாய
பூரி யசஸே
புண்ய விவர்த்தனாய
தர்மரூபாய
தனாத்யக்ஷாய
தனதாய
தர்ம பாலனாய

ஓம் ஸர்வ வேதாந்த
தத்வ்க்ஞாய 80
ஸர்வாபத் விநிவாரகாய
ஸர்வபாப ப்ரஶமனாய
ஸ்வமதானுகதாமராய
ருக்வேத பாரகாய
ருக்ஷராசிமார்க
ப்ரசாரகாய
ஸதானந்ததாய
ஸத்யஸந்தாய
ஸத்யஸங்கல்ப
மானஸாய
ஸர்வாகமக்ஞாய
ஸர்வக்ஞாய
ஸர்வ வேதாந்த
வித்வராய
ப்ரம்மபுத்ராய
ப்ராம்மணேஶாய
ப்ரம்மவித்யா விசாரதாய
ஸமானாதிக நிர்முக்தாய
ஸர்வலோக வசம்கராய
ஸஸுராஸுர கந்தர்வ
வந்திதாய
ஸத்யபூஷணாய
ப்ருஹஸ்பதயே
ஸுராசார்யாய 100
தயாவதே
சுப லக்ஷணாய
லோகத்ரய குரவே
ஸ்ரீமதே
ஸர்வகாய
ஸர்வதோ விபவே
ஸர்வேசாய
ஸர்வதா-துஷ்டாய
ஸர்வதாய
ஸர்வ பூஜிதாய நம:

குரு பகவான் நூல் முற்றிற்று

॥ சுபம் ॥

# ஓர் அரிய வாய்ப்பு

## ஜோதிடம் தபாலில் கற்கலாம்

### தமிழ் / ENGLISH

தம்முடைய நாற்பத்தேழு ஆண்டுகளுக்கும் மேலான ஜோதிட அனுபவமும் பரம்பரைக் கலைஞானமும் பலருக்கும் பயன்படும் முறையில் தபால் மூலம் ஜோதிடம் கற்பிக்க டாக்டர் கே. என். சரஸ்வதி அவர்கள் ஓர் எளிய முறையை உருவாக்கி இருக்கிறார். இம்முறையில் ஜோதிடம் பயில 4 மாதங்கள் பிடிக்கும். ஒரே முறையாக எல்லா பாடங்களும் ரெஜிஸ்டர் தபால் மூலம் அனுப்பப்படும். பாடங்களுடன் வினாத்தாளும் சேர்த்து அனுப்பப்படும்.

4 மாத முடிவில் 'கடலங்குடி ஜோதிட ஆராய்ச்சி மையம்' என்ற அமைப்பின் சார்பில் அருமையான Diploma வழங்கப்படும். மாணவர்களுக்கு மட்டும் எங்களுடைய புத்தகங்கள் சலுகை விலையில் தரப்படும்.

அட்மிஷன் பாரத்துக்கும், கட்டணம், பாடத்திட்டம் முதலான எல்லா விவரங்கள் அடங்கிய Prospectus-க்கும் ரூ. 12.00 M.O செய்யவும். English கோர்ஸுக்கான Prospectus வேண்டுவோர் ரூ. 15.00 M.O செய்யவும்.

வெளி நாட்டோர் கட்டணம் முதலான எல்லா விவரங்களுக்கும் £ British Postal Order அனுப்புக.

Prospectus-இன் விலையோ கல்வியின் கட்டணமோ முன்னறிவிப்பின்றி மாற்றப்படலாம். எனவே அவ்வப்போது நிலையைக் கேட்டறிந்து M.O./B.P.O. செய்க.

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :

Kadalangudi Astrological Research Centre
38, Natesa Iyer Street
Madras - 600 017
INDIA

# ஆசிரியை K. N. S.-ஐப் பற்றி

*MA., M.Ed., Doctorate in Counselling, Diplomas in Naturopathy, Yoga, Art and Computer Science.*



டாக்டர் கே. என். சரஸ்வதி அம்மையார் தொடக்கக் காலத்தில் பாரத சாரணர் இயக்கத்தின் வழிகாட்டி - முதல்வராகவும் **(Guide - Captain)** காந்தி கிராமம் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி மாணவர் ஒன்றியத் துணைச் செயலாளராகவும் சென்னை-பள்ளிகள் முன்னேற்ற மாநாட்டு **(schools - improvement - Conference)** உறுப்பினராகவும் சென்னை - தியாகராயநகர் அரசினர் பெண்கள் உயர்நிலைப்பள்ளி ஆலோசனைக் குழுவின் செயலாளராகவும், சென்னை வித்யோதயா பெண்கள் ஆங்கிலப்பள்ளியின் பொருளாளராகவும் தியாகராயநகர் பெண்கள் கூட்டுறவு மன்றத்தின் இயக்குநராகவும் பல துறைகளில் பரபரப்பாகப் பணியாற்றிய இவர், பின்னர் மன இயல் ஆய்வு நிறுவனத்தின் கிளை ஆய்வுத் தொடர்பாளராகவும் **(Field reporter)** அமெரிக்காவில் உள்ள சில மன இயல் துறை நிபுணர்களின் சங்கங்களில் ஆலோசகராகவும் இருந்திருக்கிறார். பெண்களுக்கு, குறிப்பாக ஆதரவற்றோருக்கு, ஆங்கிலம், கணிதம், ஒழுங்கைப் பற்றிய பாடம் ஆகியவற்றைக் கற்றுத் தருவதில் இவருக்குச் சுமார் பத்தாண்டுகள் அநுபவம் உண்டு. கௌன்ஸெலிங் **(counselling)**, சம்பந்தப்பட்ட பல தேசிய, அனைத்துலக மாநாடுகளிலும் ஆய்வுப் பட்டறைகளிலும் (workshops) கலந்து கொண்டு அத்துறையினருக்கும் பொதுமக்களுக்கும் நல்ல ஆலோசகராக இருந்து தன் உதவியை வழங்கி வருகிறார். திருமதி **K, N.S.**, மகான்களின் வாழ்வும் வாக்கும், சிறப்புத் திருத்தலங்கள், பதஞ்சலி யோக ஸூத்திரம், இறப்பும் பின் பிறப்பும், தன் மதிப்பை உயர்த்த வழிகள், சிநேகம் சிறக்கச் சிந்தனைகள் உழைப்பின் உயர்வில் வாழ்வு, திருமணம், இயற்கை வைத்தியம், பெண்களுக்காக, நவராத்திரி போன்ற நூல்களின் ஆசிரியை ஆவார்.